35 தாயுரை கொண்டு தாதையுதவிய தரணிதன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை
கண்டால்
ஆயிர மிராமர்நின் கேழ் ஆவரோ தெரியினம்மா.

36 என்புகழ் கின்றதேழை யெயினனே னிரவி
யென்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு
மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்க
ளெல்லாம்
உன்புகழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத்
தோளாய்.

37 ஏனவிவை யன்ன மாற்ற மினையன பலவுங்கூறிப்
புனைகழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன் பொருவில்
காதல்
அனையவற் கமைவிற் செய்தா னவனுற கண்டிலாதார்
நினைவருங் குணங்கொ டன்றோ இராமன் மேனிமிர்ந்த
காதல்.

38 அவ்வழி யவனை நோக்கி யருடரு வாரியன்ன
செவ்வழி யுள்ளத் தண்ண றென்றிசைச் செங்கை
கூப்பி
எவ்வழி யுறைந்தா னெம்மு னென்றலு மெயினர்
வேந்தன்
இவ்வழி வீரயானே காட்டுவ லெழுக என்றான்.

39 காரெனக் கடிது சென்றான் கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டு கின்றான்.

40 இயன்றதென் பொருட்டி னாலிவ் விடருனக் கென்ற போழ்தும்
அயின்றனை கிழங்குங் காயும் அமிழ்தென வமைய புல்லில்
துயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காசு
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வென் யானே.

41 தூண்டர நிவந்த தோளான் பின்னருஞ் சொல்லு வானந்
நீண்டவன் துயின்ற சூழ லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் தொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்தது
யாண்டென இனிது கேட்டா னெயினர்கோ னிதனைச் சொன்னான்.

42 அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகையோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்றா னிமைப்பில னயன மென்றான்.

43 என்பத்தைக் கேட்ட மைந்த னிராமனுக் கிளையா
ரென்று
முன்பாத்த தோபுறத் தேதமில் யானென்று முடிவி
லாத
துன்பத்துக் கேதுவானே னவனது துடைக்க நின்றான்
அன்பத்துக் கெல்லையுண்டே யழகிதென் னடிமை
யென்றான்.

44 அவ்விடை யண்ணலாறு மன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தார நின்றார்க்குஞ் செறிகழற் புளிஞர்
கோமா
னிவ்விடைக் கங்கை யாறுறி னேற்றினை யாயி னெம்மை
வெவ்விடர்க் கடனின் றேற்றி வேந்தன்பால் விடுத்த
தென்றான்.

45 நன்றெனப் புளிஞர் வேந்த னண்ணினன் றமரை
நாவாய்
சென்றுநீர் தருதிரென்ன வந்தன சிவன்சேர்
வெள்ளிக்
குன்றெனக் குனிக்கு மம்பொற் குவடென நகுபேரன்
மானம்
ஒன்றென காணிப் பல்வே றுருவுகொண் டனையவான.

46 நங்கையர் நடையி னன்ன நாணுறு செலவி னவாய்
கங்கையு மிடமிலாமை மிடைந்தன கலந்த வெங்கும்
அங்கொடிங் கிழித்தி யேற்று மமைதியி னமரர்
வையத்
திங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்னலான.

52 காவிரண் டாயக் கோடு நாவயி றுவாய்கண் மீதாச்
செவிரண் டசைய வாலு நதிரொடு நதிபெய் சென்ற
பாவிரண் டோட மெய்யு பயந்திரண் டனைய நெஞ்ச
நாவிரண் டனைய காலு நடிநடைக் கவினப் பாய்மா.

53 ஊடுபு நெருக்கி யோடக் கொருவர்முன் னொருவர் கிட்டிச்
சூடகக் களிர்க்கைகள் மாகர் குழுமினர் துவன்றித் தோன்றப்
பாடிய கவிகள் யாவும் பந்தியாய் கடையிற் குத்தக்
கோடுகள் பிணைந்து வென்ன பிணைந்தன குவவுக் கொங்கை.

54 பாங்கினுக் கரிய மாவப் படர்திரை தவழப் பாரின்
ஓங்குநீ ரழுவந் தன்னுள் விழுமதக் கலுழி வெள்ளத்
தொங்கைகள் கலைகள் தோன்று ஒளித்தவ ணுயர்ந்த கும்பம்
தங்குழு கந்தை நக்கசமூர்ப்பெயனப் பொலிந்த மாதோ.

55 பொலங்குழை மகளிர் காவாய் போக்கினென் றென்று தாக்க
மலங்கின ரிவண்டு பாலு மறுகினர் வெருவி நோக்க
அலங்குநீர் வெள்ளந் தள்ளி யழிகர அங்குமிங்கும்
கலங்கலின் வெருவிப் பாயுங் கயற்குல நிகர்த்த கண்கள்.

56 இயல்வுறு செலவி னுவா யிருகையு மெயினர் தூண்டத்
துயல்வன துடிப்பு வீசுந் துவலைகண் மகளிர் மென்றூசு
உயல்வுறு பரவை யல்கு லொளிபுறத் தளிப்ப உள்ளத்
தயர்வுறு மதுகை மைந்தர்க் கயாவுயிர்ப் பளித்த தம்மா.

57 இக்கரை யிருந்த சேனை யேறின முகந்து வெஃகி
அக்கரை படர வீசி வறியன அணுகு நாவாய்
புக்கலை யாழி நன்னீர் பொறுத்தன போக்கிப் போக்கி
அச்சணைத் துவரி பீரு மகன்மலை நிகர்த்த வம்மா.

58 அகிலிடு தூபமன்ன ஆய்மயிற் பீலி யார்த்த
புகிழுடை புரவியாக் கண்டு கூர்ப்பன முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம்பொன் கட்டிடைத் தொடுத்தமுத்த
நகுகொடி நெடிய பாயி னவமெனச் சென்ற நாவாய்.

59 ஆனனக் கமலத் தன்ன மின்னன்ன அமிழ்தச் செவ்வாய்த்
தேனன்ன குழலோரேறு மம்பிகள் சிந்துமுத்த
மீனென விரிந்த கங்கை விண்ணெனப் பண்மை முற்றி
வானவர் மகளி ரொரு மானமே நிகர்த்த மாதோ.

60 துளிபடத் துழாவு கின்றோர் றுடுப்பிரு காலிற் றோன்ற
களிர்புனற் கங்கை யாற்றி னகத்தெனச் செல்லு நாவாய்
களியுடை மந்தை யன்ன கனங்குழை கயறகண் மாதர்
ஒளிரடிக் கமலந் தீண்ட வுயிர்படைத் தனவே யொத்த.

61 மையறு விசும்பின் மண்ணின் மற்றுமோ ருலகின் முற்று
மெய்வினை தவமே யன்றி வேறுமொன் றுளதோ வீரோர்
செய்வினை நாவா யேறித் தீண்டலா மனத்திற் செல்லு
மொய்விசும் போடமாகத் தேவரின் முனிவர் போனார்.

[ வேறு ]

62 அறுபதி னாயிர மக்குரோணி யென்
றுறுதிசெய் சேனையு மெல்லை தீர்நகர்
மறுவறு மாந்தரு மகளிர் வெள்ளமுஞ்
செறிதிரைக் கங்கையின் கடக்கச் சென்றவே.

63 கழித்துநீர் வருதுறை யாற்றைச் சூழ்படை
கழித்துநீங் கியபின்றனக் கள்ள வாசையை
அழித்துவே றவனிபண் டாண்ட வேந்தரை
இழித்துமே லேறினான் தானும் ஏறினான்.

64 தன்னை தம்பியுந் தாயர் மூவருஞ்
சொன்னதேர் வல்லவனுந் தூய தோழனுந்
துன்னின வேறலுந் துழாது டுப்பெனு
நன்னடச் சாலிறு னடத்தன் மேயினான்.

[ வேறு ]

65 சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோசலையைத்
தொழுது நோக்கிக்
கொற்றத்தார்க் குரிசிலிவ ரானென்றுகுகன் வினவக்
கோக்கள்வைகும்
முற்றத்தான் முதல்தேவி மூன்றுலகு மீன்றானை
முன்னீன்றானைப்
பெற்றத்தால் பெறுஞ்செல்வம் யான்பிறத்தலால்
துறந்த பெரியாள் என்றான்.

66 என்றலுமே யடியிணைமிசை நெடிதுவிழுந் தழுவானை
யிவன் யாரென்று
கன்றுபிரி காராவின் துயருடைய கொடிவினவக்
கழல்கால் மைந்தன்
இன்துணைவ னிராகவனுக் கிலக்குவற்கு மிளையவற்கு
மெனக்கு மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா னிந்நின்ற
குரிசி லென்றான்.

67 நைவீரலீர் மைந்தீ ரினித்துயரா லுடன்பிறந்து காடு
நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற் றன்றே
விலங்கல் திண்தோள்
கைவீரக் களிறனைய காளையிவன் தன்னோடுங் கலந்து
நீவிர்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை நெடுங்கால மளித்தி
ரென்றாள்.

68 அறந்தானே யென்கின்ற அயனின்றா டனைநோக்கி
ஐய அன்பின
நிறைந்தானை யுரையென்ன நெறிதிறம்பாத் தன்
மெய்யை நிற்பதாக்கி
இறந்தான்த னிளந்தேவி யாவர்க்குந் தொழுகுலமா
மிராமன் பின்பு
பிறந்தானு முளனென்னப் பிரியாதான் தனைப் பயந்த
பெரியா ளென்றான்.

69 கடும்பா னத்திடைத்தன் றுணையேகத் தோன்றல்
துயர்க்கடலி னேக
சடுமையார் கானகத்துக் கருணையார் கலியேகக்
கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந் தன்மனத்தே
நினைந்து செய்யுங்
கொடுமையா ளளந்தானை யாரிவனென் றுரை யென்
னக்குரிசில் கூறும்.

70 படரெலாம் படைத்தானைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத் தன்பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கும் உயிர்ப்பாரங்
குறைந்து தேய
உடரெலா முயிரில்லா வெனத்தோன்று முலகத்தே
யொருத்தி யன்றே
இடரிலா முகத்தானை யறிந்திலையே லிந்நின்றா ளென்னை
யீன்றாள்.

[ வேறு ]

71 என்னைக் கேட்டவ் விரக்க மிலானையுந்
தன்னற் கையின் வணங்கினன தாயென
அன்னப் பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

72 இழிந்த தாயர் சிவிகையி னேறத்தான்
பொழிந்த கண்ணில் புதுப்புனல் போயினான்
ஒழிந்தி லன்குக னும்முட னேகினான்
கழிந்த னன்பல காவதங் காலினே.

73 பரத்தி னீங்கும் பரத்துவ னென்னும்பேர்
வரத்தின் மிக்குயர் மாதவன் வைகிடம்
அருத்தி கூர அணுகின ரண்டவன்
விருத்த வேதிய ரோடெதிர் மேவினன்.

# ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರ್

ಇವರು ಹುಟ್ಟಿದ್ದು ತಿರುಮುನಿಪ್ಪಾಡಿನಾಡಿನ ಶನಿಪ್ಪೂರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೧೫ನೆಯ ಶತಮಾನ. ಇವರದು ವೈಷ್ಣವ ಮತ. ಇವರನ್ನು ಆಳ್ವಾರೆಂದು ಪೂಜಿಸುವುದು ವಾಡಿಕೆ. ಇವರ ತಂದೆತಾಯಿಗೆ ಪೆರಿಯಾಳ್ವಾರಲ್ಲಿ ಭಕ್ತಿ ಹೆಚ್ಚಾಗಿದ್ದುದರಿಂದ ಇವರಿಗೆ ಪೆರಿಯಾಳ್ವಾರ್ ಎಂದು ನಾಮಕರಣಮಾಡಿದರು. ತಿರುವಕ್ಕವಾಗ್ಯೆ ಎಂಬಲ್ಲಿ ಆಳಿದ ಚೇರಕುಲದ ರಾಜನಾದ ವರಪತಿ ಆಟ್ಕೊಂಡಾನ್ ಎಂಬವನ ಇಷ್ಟದ ಪ್ರಕಾರ ಇವರು ಭಾರತವನ್ನು ಬರೆದರೆಂದು ಹೇಳುತ್ತಾರೆ. ಕವಿಗೂ, ಇವರ ತಮ್ಮನಿಗೂ ಪಿತ್ರಾರ್ಜಿತವಾದ ಸ್ವತ್ತಿನ ಭಾಗದ ವಿಷಯದಲ್ಲಿ ಸ್ವಲ್ಪ ತಿಕ್ಕಾಟವುಂಟಾಗಲು, ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರು ತಮ್ಮ ರಾಜನಲ್ಲಿಗೆ ತೀರ್ಮಾನಕ್ಕಾಗಿ ಹೋದರು. ರಾಜನು ತೀರ್ಪುಕೊಡದೆ ಕವಿಗೆ ಭಾರತ ಬರೆಯೆಂದು ಹೇಳಿದನು. ಅದೇಪ್ರಕಾರ ಅವರು ಭಾರತ ರಚನೆಮಾಡಿ ರಾಜನಿಗೆ ಓದಿಹೇಳಲು. ರಾಜನು ಕಡೆಗೆ 'ಭಾರತದಲ್ಲಿರುವ ಸೋದರ ಜಗಳಕ್ಕೂ ನಿಮ್ಮಿಬ್ಬರ ಜಗಳಕ್ಕೂ ಏನು ವ್ಯತ್ಯಾಸವೆಂದು ಕೇಳಿದನು. ಕವಿಗೆ ಒಡನೆ ಚುರುಕುಮುಟ್ಟಿದಂತಾಗಿ ಸ್ವತ್ತೆಲ್ಲವನ್ನೂ ತನ್ನ ತಮ್ಮನಿಗೇ ಕೊಟ್ಟು ಶ್ರೀರಂಗಕ್ಕೆ ಹೊರಟುಹೋದರು. ತಾವು ಸಂಸ್ಕೃತ, ತಮಿಳು ಭಾಷೆಗಳಲ್ಲಿ ಮಹಾಪಂಡಿತರಾಗಿದ್ದುದರಿಂದ ವಿಶೇಷ ಹೆಮ್ಮೆಪಡುತ್ತಿದ್ದರು. ಕುಕವಿನಿಂದೆ ಮಾಡುವುದರಲ್ಲಿ ಅಗ್ರಗಣ್ಯರು. ಕುಕವಿದಂಡನೆಯೆಂದರೆ ಇವರಿಗೆ ಬಹಳ ಆಸೆ. ಕೀಳುಮಟ್ಟದ ಕವಿಗಳ ವಿಷಯದಲ್ಲಿ ಕರುಣೆಯೇ ಇಲ್ಲದೆ ಅವರ ಕಿವಿ ಕತ್ತರಿಸುವುದು ಇವರ ವಿನೋದ. ಆದ್ದರಿಂದ ತಮಿಳಿನಲ್ಲಿ "ಕುಕವಿಗಳ ಕಿವಿಗೆ ವಿಲ್ಲಿಯೇ ಮೃತ್ಯು" ಎಂಬ ಗಾದೆ ಕೂಡ ಬಳಕೆಯಲ್ಲಿದೆ.

ಶ್ರೀರಂಗದಲ್ಲಿ ಕೆಲಕಾಲವಿದ್ದು, ಆಮೇಲೆ ದೇಶಸಂಚಾರಮಾಡುತ್ತ ತಿರುವಣ್ಣಾಮಲೆಗೆ ಬಂದರು. ಪದ್ಧತಿಪ್ರಕಾರ ಅರುಣಗಿರಿನಾಥರೊಂದಿಗೆ ವಾದಹೂಡಿ ತಾವು ರಚಿಸಿದ "ಅಟಿಕರಂದಾದಿ"ಗೆ ವ್ಯಾಖ್ಯಾನಹೇಳಿರೆಂದು ಕೇಳಿದರು. ಅರುಣಗಿರಿನಾಥರು ಸಮರ್ಪಕವಾಗಿ ವ್ಯಾಖ್ಯಾನಮಾಡಿ

"ಕಂಪರಂಪಾದಿ" ಎಂಬ ಉದ್ಗ್ರಂಥವನ್ನು ರಚಿಸಿ, ಅದಕ್ಕೆ ವ್ಯಾಖ್ಯಾನ ಹೇಳಿರೆಂದು ವಿಲ್ಲಿಯನ್ನು ಕೇಳಿದರು. ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರು ಹಾಗೂ ಹೀಗೂ ಅರ್ಥ ವಿವರಣೆಮಾಡುತ್ತ ಕಡೆಗೆ ಕಲ್ನೆಯ ಯಮಕ ಪದ್ಯಕ್ಕೆ ಅರ್ಥ ಹೇಳಲಾರದೆ ತಮ್ಮ ಸೋಲನ್ನು ಒಪ್ಪಿಕೊಂಡರು. ಆಗ ಕರುಣೆಯ ಕಡಲಾದ ಅರುಣಗಿರಿನಾಥನ ಉಪದೇಶದ ಪ್ರಕಾರ ಬುದ್ಧಿ ಕಲಿತು ಕೊಂಡು ಕುಕವಿನಿಂದೆ, ದಂಡನೆಗಳಲ್ಲಿಯೂ, ಸ್ವಾಹಂಕಾರದಲ್ಲಿಯೂ ಆಸೆ ತೊರೆದರು.

ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರವರ ಭಾರತ ಬಹಳ ಸ್ವಾರಸ್ಯವಾದ ರಸಗ್ರಂಥ. ಈಗ ತಮಿಳಿನಲ್ಲಿರುವ ಭಾರತಗಳಲ್ಲೆಲ್ಲಾ ಇದೇ ಬಹು ಶ್ರೇಷ್ಠವಾದುದು. ಕವಿಗೆ ಸಂಸ್ಕೃತ ಪಾಂಡಿತ್ಯ ವಿಪುಲವಾಗಿದ್ದುದರಿಂದ ಗ್ರಂಥದಲ್ಲಿ ಸಂಸ್ಕೃತ ಪದಪ್ರಯೋಗ ವಿಶೇಷವಾಗಿದೆ. ಶೈಲಿ ಅತಿ ಮನೋಹರ. ಶಬ್ದ ತಾಂಡವವನ್ನಂತೂ ಹೇಳತೀರದು. ಸಂಸ್ಕೃತ ಮತ್ತು ತಮಿಳು ಶಬ್ದ ಗಳನ್ನು ಸಮರಸವಾಗಿ ಬೆರಸಿ ಪದ್ಯ ಹಾಡುವುದರಲ್ಲಿ ಇವರು ಬಹು ಪ್ರಸಿದ್ಧರು. ತಮ್ಮ ಭಾರತದಲ್ಲಿ ಬರುವ ಕಿರಾತಾರ್ಜುನೀಯ ಭಾಗದಲ್ಲಿ ತಮ್ಮ ವೀರ ವೈಷ್ಣವತ್ವವನ್ನೂ ಮರೆತು ಪರಶಿವನನ್ನು ವಿಶೇಷವಾಗಿ ಸ್ತೋತ್ರಮಾಡಿದ್ದಾರೆ.

# வில்லிபாரதம்—கன்னபருவம்

## பதினேழாம் போர்ச்சருக்கம்

1 ஏத்த லங்களிறுமிகையா மேனாகை வாகையால்
எதிரிலா வீரன்
மெய்த்த லமுழுதுந் திறந்துகுருதி வெயிலவன்
கரங்கள் போலுகுப்பக்
கொத்த லரலங்கல் மகுடமுங் குண்டலங்களுமுருக்
குலைந்துங்
கைத்த லமறந்ததில்லை விற்குனிப்புங் கடுங்கணை
தொடுத்திடுங் கனைக்கும்.

2 அத்தவெற்பிரண்டு விற்கிடையெனப்போய் ஆதபன்
சாய்தல் கண்டருளி
முத்தருக் கெல்லாமூலமாய் வேதமுதற் கொழுந்
தாகிய முதல்வன்
சித்திரச் சிலைக்கை விசயனைச் செருநீயொழி கெனத்
தேர்மிசை நிறுத்தி
மெய்த்தவப்படி வேதியனாகி வெயிலவன் புதல்வனை
யடைந்தான்.

3 தாண்டிய தரங்கக் கருங்கடலுடுத்த தரணியில்
தளர்ந்தவர் தமக்கு
வேண்டிய தருதிநீயெனக் கேட்டேன் மேருவி
னிடைத்தவம் பூண்டேன்
ஈண்டிய வறுமைப் பெருந்துயருழந்தேன் இயைந்த
தொன்றிக் கணத்தளிப்பாய்
தூண்டிய கவனத்துரகதத் தடந்தேர்ச்சுடர் தரத்
தோன்றியதோன்றல்.

4 என்றுகொண்டந்த வந்தணனுரைப்ப இருசெவிக்
கமுதெனக்கேட்டு
வென்றிகொள் விசயன் விசயவெங்கணையால்
மெய்தளர்ந்திரதமேல் விழுவோன்
நன்றென நகைத்துக்கரத்தரு பொருணீ நவில்கென
நான்மறையவனும்
ஒன்றியபடி நின்புண்ணிய மனைத்தும் உதவு கென்றலும்
உளமகிழ்ந்தான்.

5 ஆவியோ நிலையிற்கலங்கிய தியாக்கையகத்ததோ
புறத்ததோ அறியேன்
யாவிடேன் வேண்டும் பொருளெலா நயக்கும்
பக்குவந்தன்னில் வந்திலையால்
ஓவிலாதியான் செய்புண்ணிய மனைத்துமுதவினேன்
கொள்கநீ யுனக்குப்
பூவில் வாழயனு நிகரலவென்றால் புண்ணிய
மிதனினும் பெரிதோ.

6 என்னமுன் மொழிந்து கரங்குவித்திறைஞ்ச இறைஞ்
சலர்க்கெழிலி யேறனையான்
கன்னனைப்புவகைக் கருத்தினொநோக்கிக் கைப்புனலுடன்
தருகென்ன
அன்னவனிதயத்தம் பின்வாயம் பாலளித்தலும்
அங்கையா லேற்றான்
முன்னமோரவுணன் செங்கை நீரேற்றுமூவுல
கமுமுடன் கவர்ந்தோன்.

7 மல்லற் றொட்டனிருப்பனை முனிவன்மகிழ்ந்துநீ
வேண்டிய வரங்கள்
சொல்லுக வுனக்குத்தருது மென்றுரைப்பச்சூரன்
பாமதலையுஞ் சொல்வான்
அல்லல் வெவ்வினையா லின்னமுறுபவ முண்டாயினு
மேழெழு பிறப்பும்
இல்லையென்றிரப்போர்க் கில்லையென்றுரையா
இதய நீயளித்தருளென்றான்

8 மைத்துனனுரைத்த வாய்மைகேட்டையவை
மனமலருகந் துகந்தவனைக்
கைத்தலமலரால் மார்புறத்தழுவிக கண்மலர்க்கருணை
நீராட்டி
எத்தனை பிறவியெடுக்கினு மவற்றிலீகையுஞ்
செல்வமுமெய்தி
முத்தியும்பெறுதி முடிவிலென்றுரைத்தான் மூவரு
மொருவனுமூர்த்தி.

9 போற்றியகன்னன் கண்டுகண்களிப்பப்புணரி
மொண்டெழுந்த கார்முகிலை
மாற்றியவடிவம் பஞ்சவாயுதமும் வயங்கு
கைத்தலங்களுமாகிக்
கூற்றுறழ் கராவின் வாயினின்றழைத்த குஞ்சர
ராசன் முனன்று
தோற்றியபடியே தோற்றினன் முடிவுந்தோற்றமு
மிலாதபைந்துளவோன்.

13 தருமன்முதலான அரியகாதல் தம்பியரோடமர்
மலைந்து தறுகண்ணமைப்
பெருவில்லை அயிரனைய தோழற்காகச் செஞ்
சோற்றுக்கடன கழித்தேன தேவர்கோவுக்கு
உயர பெறு நற்கவசமுங் குண்டலமு மீந்தேனுயர்
பெருநல்வினைப்பேறுனக்கே தந்தேன
மருதிடைமுன தவழ்ந்தருளுஞ் செங்கண்மாலே
மாதவத்தா லொருதம்பியான வாழ்ந்தவாறே.

14 வான்பெற்ற நதிசமழ்த்தாள் வணங்கப்பெற்றேன
மதிபெற்ற திருவுளத்தால் மதிக்கப்பெற்றேன,
தேனபெற்ற துழாயலங்கல்களப மார்புந்திருப்
புயமுங்கைதவந்து நீண்டப்பெற்றேன்,
ஊன்பெற்ற பகழியினாலழிந்து வீழ்ந்துமுணர்வுட
னின்திருநாமமுரைக்கப் பெற்றேன
பார்பெற்ற பெருந்தவப் பேறென்னையன்றி
இருநிலத்திற் பிறந்தோரில் யார்பெற்றாரே.

15 என்றுமகிழ்வுற வணங்கு மெலிமைந்தன் இணையுற
வண்புயவினி லானிரையின் பின்போய்க்
கன்றுகொடு விளவெறிந்த கண்ணன்தானுங்
கண்ணனுக்குக் கட்டுரைப்பான் கடவுளுந்தன்
அன்றனது கவசமுங்குண்டலமும் வாங்க அழைத்
தேனுங்குந்தியைக் கொண்டரவவாளி
யொன்றொழியத் தொடாத வரங்கொள்வித்தேனு
முற்பவத்திலுண்மை யுனக்குணர் வித்தேனும்.

16 தக்கன்தன் மகவானவுமை வாரிதனஞ்சயனைச்
சதியாமல் சாய்வித்தேனும்
மெய்க்கருணைதன் பொருட்டால் மானேயென்று
மீண்டும்போய்த் தேர்வல்லவன் விசயற்கானான்
எக்கணும் எக்கிரியுமெல்லா மண்ணுமிமையோரு
மானுடரு மெல்லாமாகி
மைக்கணிளங் கொடியையாண்டுகின்றானும்
வரிவளையுடைத்தன்கர் வாக்குமாலே.

---

## ಕಲಿಂಗತ್ತು ಪರಣಿ

ಇದರ ಕರ್ತೃ ಜಯಂಕೊಂಡಾರ್; ತಂಜಾವೂರು ಜಿಲ್ಲೆಯ ದೀಪಂ ಕುಡಿಯಲ್ಲಿ ಹುಟ್ಟಿದರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೧೦೭೦–೧೧೧೮. ಇವರು ಕುಲೋತ್ತುಂಗ ಚೋಳನ ಆಸ್ಥಾನ ಕವಿಯಾಗಿದ್ದರು. ಇವರು ಜೈನಮತಾವಲಂಬಿಗಳಾಗಿದ್ದರೂ ತಮ್ಮ ಗ್ರಂಥದಲ್ಲಿ ಶಿವಸ್ತುತಿ ವಿಷ್ಣು ಸ್ತುತಿಗಳನ್ನು ಮಾಡಿದ್ದಾರೆ. ಇದರಿಂದ ಇವರು ಮೊದಲು ಜೈನರಾಗಿದ್ದು ತರುವಾಯ ಶೈವರಾಗಿರಬಹುದೆಂದು ಕೆಲವರು ಊಹಿಸುತ್ತಾರೆ.

ಕಲಿಂಗ ಯುದ್ಧವನ್ನು ಗೆದ್ದ ಕುಲೋತ್ತುಂಗನ ಶೌರ್ಯ ಸಾಹಸಗಳ ವರ್ಣನೆಗಾಗಿ ಈ ಗ್ರಂಥ ರಚಿತವಾಯಿತು. ರಾಜನು ಕವಿಗೆ ಒಂದೊಂದು ಪದ್ಯಕ್ಕೂ ಒಂದೊಂದು ಹೊನ್ನಿನ ತೆಂಗಿನಕಾಯನ್ನೂ ಕವಿಚಕ್ರವರ್ತಿ ಎಂಬ ಬಿರುದನ್ನೂ ಕೊಟ್ಟು ಗೌರವಿಸಿದನು ಎನ್ನುತ್ತಾರೆ.

ಪರಣಿ ಸಾಹಿತ್ಯಜಾತಿಯಲ್ಲಿ ಕಲಿಂಗತ್ತು ಪರಣಿಯೇ ಮೊದಲನೆಯದು. ಇದರಲ್ಲಿ ನಾನಾ ಅಲಂಕಾರಗಳು, ನವರಸಗಳು, ಅನ್ಯಾದೃಶ ಕಲ್ಪನೆಗಳು ಇದ್ದು ಇದು ವಿದ್ವಾಂಸರ ಮೆಚ್ಚನ್ನು ಪಡೆದಿದೆ.

12 கலவிக் களியின் மயக்கத்தே
கலைபோ யகன்ற தறியாமல்
நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்
நிறைபொற் கபாடந் திறமினோ.

[வேறு]

13 பங்குகன் வேல்செய்த புண்களைத்
தடமுலை வேதுகொண் டொற்றுவீர்
செக்கனி வாய்மருந் தூட்டுவீர்
செம்பொ னெடுங்கடை திறமினோ.

14 தண்கொடை மாலதனை மார்புதோய்
தாதகி மாலையின்மேல் விடுப்பீர்
கண்கொடு போம்வழி தேடுவீர்
கனக நெடுங்கடை திறமினோ.

[வேறு]

15 அவசமுற் றுளநெகத் துயிலெழப் பவளவா
யணிசிவப் பறவிழிக் கடைசிவப் புறநிறைக்
கவசமற் றிளநகைக் களிவரக் களிவருங்
கணவரைப் புணருவீர் கடைதிறந் திடுமினோ.

16 அஞ்சியே கயல்கெடக் கடலிற் பொருதுசென்
றணிகடைக் குழையிலே விழவடர்க் கெதிர்தலால்
வஞ்சிமா னதன்விடுர் படையினிற் கொடியசண்
மடநவீர் சுடர்மணிக்கடை திறந்திடுமினோ.

17 நனவினிற் சயகரன் புணரவே பெறினுநீர்
நனவெனத் தெளியுத் தகவிலாயும் பழையவக்
கனவெனக் கூறுவீர் தோழிமார் நகைமுகங்
கண்டபின் றேறுவீர் கடைதிறந் திடுமினோ.

25 களபவண்ட விடுகலச கொங்கைகளின்
மதியெ ழுந்துகனல் சொரியுமென்
றளகபந்திமிசை யளிகள் பந்தரிடு
மரிவைமீர் கடைக டிறமினோ.

26 சொருகு கொந்தளக மொருகை மேலலைய
வொருகை கீழலைசெய் துகிலொடே
திருவ னந்தலினு முசமலர்ந்துவரு
தெரிவை மாதர்கடை திறமினோ.

[ வேறு ]

27 உந்திச்சுழியின் முளைத்தெழுந்த
வுரோமப் பசுந்தா ளொன்றிரண்
டந்திக்கமலங் கொடுவருவீ
ரம்பொற் கபாடந் திறமினோ.

28 கழுவுங் கொழுநர் பிழைநலியக்
கழுவே யென்னக் கழுவியகை
வழுவவுடனே மனங்குழைவீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ.

29 வேகம்விளைய வருங்கொழுநர்
விழிகள் சிவந்த படிநோக்கிப்
போகம்விளைய நகைசெய்வீர்
புனைபொற் கபாடந் திறமினோ.

[ வேறு ]

30 முலைமீது கொழுநர்கை நகமேவு குறியை
முன்செல்வ மில்லாத வவர்பெற்ற நிதிபோற்
கலைமீதெடாவாரு மில்லா விடத்தே
கண்ணுற்று நெஞ்சங் களிப்பீர்க டிறமின்.

[ வேறு ]

31 மெய்யி லணைத்துருகிப் பையவகன் றவர்தா
மீள்வரெனக்கருதிக் கூடலிழைத்தறவே
கையிலிழைத்த மணற்கண்பனி சோர்புனலிற்
கரைய விருந்தழுவீர் கடை திறமின் றிறமின்.

[ வேறு ]

32 கடலின் விடமென அமுதென மதனவேள்
கருதி வழிபடு படையொடு கருதுவா
ருடலி னுயிரையு முணர்வையு நடுவுபோ
யுருவு மதர்விழி யுடையவர் திறமினோ.

33 இடையி னிலையரி திறமிறு மெனவெழா
வெமது புகலிட மினியிலை யெனவிடா
வடையமதுகர மெழுவது விழுவதா
மளக வனிதைய ரணிகடை திறமினோ.

[ வேறு ]

34 முறுவல் மாலையொடு தாள மாலைமுக
மலரின் மீதுமுலை முகிழினுஞ்
சிறுநிலாவுமதி லமிகுநிலாவுமென
வருந லீர்கள் கடை திறமினோ.

35 அளக பாரமிசை யசைய மேகலைக
ளவிழ வாபரண வகையெலாம்
இளக மாமுலைகளிணைய நுமல்வரு
மியன லீர்கடைக டிறமினோ.

36 மதுர மானமொழி பதறவாள் விழி
சிவப்ப வாயிதழ் வெளுப்பவே
யதர பானமது பானமாகவறி
வழியு மாதர்கடை திறமினோ.

[ வேறு ]

37 பூவிரிமதுகர நுகரவும் பொருகய லிருகரை புரளவுங்
காவிரி யெனவரு மடநலீர் கனக நெடுங்கடை
திறமினோ.

[ வேறு ]

38 கூடுமிளம் பிறையிற் குறுவெயர் முத்துருளக்
கொங்கை வடம்புரளச் செங்கழு நீரளகக்
காடுகுலைந் தலையக் கைவளை பூசலிடக்
கலவிவிடா மடவீர்கடை திறமின் றிறமின்.

[ வேறு ]

39 உபய தனமசை யிலொடியுமிடை நடையை
யொழியு மொழியுமென வொண்சிலம்
பபயமபயமென வலறநடை பயிலு
மரிவை மகளிர்கடை திறமினோ.

[ வேறு ]

40 காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
கலவிமடவீர் கழற் சென்னி
காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
களப்போர் பாடக்கடை திறமின்.

41 இலங்கை யெறிந்த கருணா கரன்ற
னிகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடக்கடை திறமின்.

6 அந்த முட்டை யிருக்குமவி ருக்கின்றவழியே
யாகவந்தவவ் வருக்கமும் வருக்கமுழுதும்
வந்த வட்டமு மொட்டரிய சங்கிதைகளும்
வாய்மை வேதியர்கடாம் விதிபெறும்
வகையுமே.

7 கமல யோனிமுத லாகவரு முங்கண் மரபிற்
காவன் மன்னவர்க ளாகிவருகின்ற முறையா
லமல வேதமிது தானுமிதி லாரமை நிலைத்
தமல னேயபயனாக வறிகென்றருளியே.

8 அரணி வெள்ளியிலைகப்படு மகன்ம ருருவா
யரவணைத்துயிலு மாதிமுதலாகவபயன்
றரணி காவலை யுஞ்செல மொழிந்து முனிவன்
றனெழுந்தருள மாமுனி மொழிந்தபடியே.

9 ஆதி மாலமல நாபிகமலத்த யனுதித்
தவன்மரீசி யெனுமைந்தனை யளித்தபரிசுங்
காதல் கூர்தரு மரீசிமகனாகி வருமக்
காசிபனகதி ரருக்கனை யளித்த பரிசும்.

10 அவ்வ ருக்கன்மக னாகிமனுமேதினிபுரந்
தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
றெவ்வ ருக்கமும் வியப்பமுறை செய்த பரிசு
மிக்கு வாகுவிவன் மைந்தனென வந்த பரிசும்.

11 இக்கு வாகுவின் மகன புதல்வனை வரவோ
னிகலு ரஞ்செய வருஞ்செய புரந்தரனெனுஞ்
சக்கு வாயிர முடைக்களிறுவாக னமெனத்
தானிருந்துபொரு தானவரை வென்றசயமும்.

12 ஒருதுறைப் புனல் சினப்புலியு மானு முடனே
 யுண்ணவைத்தவுர வோனுலகில் வைத்தவருளும்
பொருது றைத்தலை புகுந்து முசுகுந்த னிமையோர்
 புரமடங்கலு மரண்செய்து புரந்த புகழும்.

13 கடல்க லக்க வெழுமின்னமுது தன்னையொருவன்
 கடவுள் வானவர்க ளுண்ணவருள் செய்த கதையு
முடல்க லக்கற வரிந்து தசையிட்டு மொருவ
 னொருது லைப்புறவொ டொக்க நிறைபுக்க புகழும்.

14 சுராதி ராசன் முதலாக வருசோழன் முன்னாட்
 சோழமண்டல மமைத்தபிற கேழுலகையு
மிராச கேசரி புரந்துபரகேச ரிகளா
 மிருவ ராணைபுலி யாணையென நின்ற புகழும்.

15 காலனுக்கிது வழக்கென வுரைத்த வவனுங்
 காவிரிப்புனல் கொணர்ந்தவவ னும்பு வனியின்
மேலனைத்துயிரும் வீவதிலையாக நமன்மேல்
 வென்றிகொண்ட வனுமென் றிவர்கள் கொண்ட
 விறலும்.

16 புலியெனக்கொடி யிலிந்திரனை வைத்தவனும்
 புணரியொன் றினிடை யொன்றுபுக விட்ட
 வவனும்
வலியினிற் குருதியுண் கெனவளித்த வவனும்
 வாதராசனை வலிந்துபணி கொண்டவவனும்.

17 தூங்கு மூன்றெயிலெறிந்த வவனுந் திரண்மணிச்
 சுடர்வி மானமது வான்மிசை யுயர்த்தவவனுந்
தாங்கு பாரத முடிப்பளவு நின்று தருமன்
 றன்கடற்படை தனக்குதவி செய்தவவனும்.

18 தளவழிக்குநகை வேல்விழி பிலத்தின் வழியே
தனிந டந்துரகர் தங்கண்மணி கொண்டவனுங்
களவழிக்கவிதை பொய்கை யுரைசெய்யவு தியன்
கால்வ ழித்தளையை வெட்டியர சிட்டவனும்.

19 என்று மற்றிவர்க டங்கள்சரி தங்கள்பலவு
மெழுதி மீளவதன் மேல்வழுதி சேரன்முடியத்
தன்ற னிக்களி றணைந்தருளி வீரமகடன்
றனதடங்களோடு தன்புய மணைந்த பரிசும்.

[ வேறு ]

20 தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற்
றொடரவந்திலா முகரியைப் படத்
தெழுது கென்றுகண் டிதுமி கைக்கணென்
றிங்க ழிக்கவே யங்கழிந்ததும்.

21 தத்து நீர்வரால் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப்பரிசில் வாணர்பொன்
பத்தொடாறு நூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப்பாலை கொண்டதும்.

22 ஒருவர் முன்னோர் நாளொருவர் பின்னோர்நா
ளுதகை மன்னரே மதுரை மன்னரென்
றிருவர் தம்மையுங் கிழிகள் சுற்றுவித்
தெரிவிளக்குவைத் திகல்விளைத்ததும்.

23 வேழ மொன்றுகைத் தாலி விண்ணின்வாய்
விசையடங்கவு மசைய வென்றது
மீழமுந்தமிழ்க் கூடலுஞ்சிதைத்
திகல்கடந்தகோ ளிசைபரந்ததும்.

24 சதய நாள்விழா வுதியர் மண்டலந்
தன்னில் வைத்தவன் றனியோர் மாவின்மே
லுதய பானுவொத் துதகை வென்றகோ
னொருகை வாரணம் பலகவர்ந் ததும்.

25 களிறு கங்கைநீ ருண்ண மண்ணையிற்
காய்சினத் தொடே கலவுசெம்பியன்
குளிறு தெண்டிரைக் குரைக டாரமுங்
கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்.

26 கம்பி லிச்சயத் தம்ப நட்டதுங்
கடியரண் கொள்கல் யாணர் கட்டறக்
கிம்பு ரிப்பணைக் கிரியு கைத்தவன்
கிரிக ளெட்டினும் புலிபொறித் ததும்.

27 ஒருக ளிற்றின்மேல் வருக ளிற்றையொத்
துலகுயக்கொளப் பொருது கொப்பையிற்
பொருகளத்திலே முடிக வித்தவன்
புலிக விப்பதோர் குடைக வித்ததும்.

[வேறு]

28 பனுவலுக்கு முதலாய வேத நான்கிற்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கண்
மனுவினுக்கு மும்மடிநான் மடியாஞ் சோழன்
மதிக்குடைக்கீ ழறந் தளிர்ப்ப வளர்க்கு மாறும்.

29 குந்தளரைக் கூடற் சங்கமத்து வென்ற
கோனபயன் குவலயங்காத் தளித்த பின்னை
யிந்த நிலக்குலப்பாவை யிவன்பாற் சேர
வென்ன தவஞ்செய் திருந்தா ளென்னத்
தோன்றி.

30 எவ்வளவுந் திரிபுவன முளவாய் நிற்கு
மெவ்வளவுங் குலமறைக ளுளவாய்த் தோன்று
மவ்வளவுந் திகிரிவரை யளவுஞ் செங்கோ
லாணை செலவபயன் காத்தளிக்குமாறும்.

[ வேறு ]

31 இப்புறத் திமய மால்வரையின் மார்பினகலத்
தெழுதினானெழுது தற்கரிய வேதமெழுதி
யப்புறத்தனது தொன்மரபு மம்மரபின்மே
லுரைசெய் பல்புகழு மொன்றுமொழியாத
பரிசே.

32 எழுதி மற்றதனை செய்பவர்கள் செய்பிழையெலா
மெமர் பொறுக்கவென விப்படிமுடித்த விதனைத்
தொழுது கற்றனனெனத் தொழுது சொல்லுமளவிற்
சோழ வம்சமிது சொன்னபரி சென்னவழகே.

[ வேறு ]

33 மையகமாங் குலமடந்தை மன்னபயன்
றன்னுடைய மரபு கேட்டேற்
கையனையான் பெற்றெடுத்த வப்பொழுது
மிப்பொழுதொத் திருந்ததில்லை.

34 உலகையெலாங் கவிக்கின்றவொரு கவிகைச்
சயதுங்கன் மரபின் கீர்த்தி
யலகையெலாங் கற்றும்மினகிலபூ
தங்காப்பானவனை யென்ன.

# ಮನೋನ್ಮಣೀಯಂ

ಇದರ ಕರ್ತೃವಾದ ಸುಂದರಂಪಿಳ್ಳೈಯವರು ತಿರುವನಂತಪುರದ ಮಹಾರಾಜಾ ಕಾಲೇಜಿನಲ್ಲಿ ತತ್ವಶಾಸ್ತ್ರದ ಅಧ್ಯಾಪಕರಾಗಿದ್ದರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೧೯ ನೆಯ ಶತಮಾನ. ಆಧುನಿಕ ತಮಿಳು ನಾಟಕಗಳಲ್ಲಿ ಇದು ಮೊದಲ ಪಂಕ್ತಿಗೆ ಸೇರುತ್ತದೆ. ಲಾರ್ಡ್ ಲಿಟನ್ ಅವರ 'ದಿ ಸೀಕ್ರೆಟ್ ವೇ' ಕೃತಿಯನ್ನು ಅವಲಂಬಿಸಿ ಈ ನಾಟಕ ರಚಿತವಾಗಿದೆ. ಈ ನಾಟಕದಲ್ಲಿ ಗೋಲ್ಡ್‌ಸ್ಮಿತ್ ಅವರ 'ದಿ ಹರ್ಮಿಟ್' ಅನುವಾದವಾಗಿ ಶಿವಗಾಮಿ ಚರಿತ್ರ ಎಂಬ ಹೆಸರಿಂದ ಸೇರ್ಪಡೆಯಾಗಿದೆ. ಇಲ್ಲಿ ಎತ್ತಿ ಕೊಟ್ಟಿರುವುದು ಇದೇ ಭಾಗವನ್ನು.

ಮಲೆಯಾಳ ಪ್ರಾಚುರ್ಯದ ನಾಡಿನಲ್ಲಿ ಹುಟ್ಟಿ ಬೆಳೆದ ಇವರು ತಮಿಳಿನಲ್ಲಿ ಇಂಥ ಶ್ರೇಷ್ಠನಾಟಕವನ್ನು ಬರೆದಿರುವುದು ಶ್ಲಾಘನೀಯ ವಾಗಿದೆ. ಈ ನಾಟಕದಲ್ಲಿ ಪ್ರತಿಪಾದಿತವಾಗಿರುವ ಮುಖ್ಯ ವಿಷಯ ಜೀವಾತ್ಮ ಪರಮಾತ್ಮ ಐಕ್ಯ.

# மனோன்மணீயம்

## சிவகாமி சரிதம்

( ஈறடிவெள்ள செந்துறை )

1 "வாழிய நின்மலரடிகள்! மௌனதவமுனிவ!
மனமிரங்கி அருள்புரிந்தோர் வார்த்தை
யெனக்கீயிற்
பாழடவி யிதிற் சுழன்று பாதை விடுத்தலையும்
பாவி யொருவனை அளித்த பலன் உறுவை
பெரிதே.

2 சாரும்வரை குறியாது தன்நிழலை யளக்குந்
தன்மையென நான்நடக்கத் தான்வளரும் அடவி.
ஆரிருளில் இனிநடக்க ஆவதிலை. உடல
மாறும்வகை வீடுளதேல் அடையும் நெறி
அருளாய்."

3 என்ற மொழிகேட்ட முனியெதிர் விடையங்கி
யம்பும் :—
"ஏகாந்தப் பெரும் ககனம்; இதில் உலகர்
அணையார்;
சென்றுறைய மடமிலை; திகழ் வெளி என் வீடு;
சிந்தையற நொந்தவர்க்குச் சேரவிலை பந்தம்.

4 அறங்கிடந்த சிந்தையராய் ஆசையெலாந் துறந்த
அதிவீர ரொழிய எவராயினும் இங்கடையார்.
உறங்க அவர் பணிப்பாயும் பூவணையும் உன்னார்
உண்ணவெனிற் பாலமிழ்தும் ஒன்றாக மதியார்.

10 பொறியரவின் சுடிகையுறு பொலன் மணியின்
ஒளியும்,
பொலிமதத் திண்கறையடியின் புலமருப்பின்
ஒளியும்,
அறிவரிய சினவழுவை அழல்விழியின் ஒளியும்,
அலகிலையர் அடவியிடை அயல்காட்டும்
ஒளியே.

11 இவ்வரிய ஊசிவழி பின்தொடரும் நூல்போற
பேரயர்வின் மனமிருந்து பின்தொடரு
மைந்தன்,
அரியபுகர் இடையகற்றி அன்பொடழைத்தேகும்
அம்முனிவன் அடியன்றி அயலொன்றும்
அறியான்.

12 ஒருங்கார நிறைமுளரி புழையொடு தூக்கி நுழைந்தும்,
உயர்மலையின் குகைகுதித்தும் ஓங்கார ஒலியே
கருங்கான நதிபலவுந் தாண்டி அவரடைந்தார்
சார்பிலர்க்குத் தனித்துணையாந் தவமுனிவன்
இடமே.

13 நேயமுடன் எவ்வழியும் நேர்ந்தவரைத் தன் நுண்
நிறுவு கலைவனைத் தழைக்கும் நெருப்பொன்றும்
அன்றி
பாயிலைப் பூட்டென்ன மதிலென்ன வழங்கும்
மனையொன்றும் பெயர்க்குரிய மரபொன்றும்
இன்றி.

19 பகர்ந்த நயமொழி சிறிதும் புகுந்ததிலை செவியில்:
பாதிமுக மதியொருகைப்பதும மலர்மறைப்பத்
திகழ்ந்த சுவர் ஓவியம்போல் இருந்தவளை நோக்கி
சிந்தைநனி நொந்துமுனி சிறிது கருதிடுவான்.

20 செந்தழலும் அந்தவெல்லை திகழ்ந்தடங்கி யோங்கி
திகைக்களவி பிடித்தலைக்குஞ் சிறுபூனை யெனவே
விந்தையொடு நடம்புரிந்து வீங்கிருளை வாங்கி
மீண்டுவர விடுத்தெடுத்து விழுங்கி விளங்
கினதே.

21 மொழியாதும் புகலாது விழிமாரி பொழிய
முகங்கவிழவிருந்த குறிமுனிநோக்கி வினவும்:—
"எழிலாரும் இளமையினில் இடையூறுதிகளால்
இல்லம் அகன்றிவ்வுருவம் எடுத்திவண்
வந்தனையோ?

22 ஏதுனது கவலை? உளத் திருப்ப தெனக்கோதாய்
இழந்தனையோ அரும்பொருளை? இழந்தனரோ
நண்பர்?
காதல் கொளநீ விழைந்தமாது பெருஞ்சூதாய்க்
கைவிடுத்துக் கழன்றனளோ? மெய்விடுத்துக்
கழறாய்.

23 ஐயோ இவ்வையகத்தில் அமைந்த சுகம் அனைத்தும்
அழலால இப்பெழுங் குடங்கு நிழலாக நினையாய்
கையாரும்பொருள் என்னக்கருதி மணல்வகையைக்
காப்பதெலாம் இலவுகிளி காத்தலினும் வறிதே.

29 இவ்விதந் தன்மெய்விளங்க இருந்தமகள் எழுந்தே
இருடிபதந் தலைவணங்கி யிம்மொழியங்
கியம்பும் :—
"தெய்வமொடு நீவசிக்குந் திருக்கோயில் புகுந்த
தீவினையேன் செய்த பிழைசெமித்தருள்வை
முனியே!

30 மண்ணுலகிற் காவிரிப்பூ மாநகரிற் செல்வ
வணிககுல திலகமென வாழ்வள் ஒருமங்கை.
பண்ணரிய குணமுடையாள். இவள் வயிற்றில் உதித்
தோர்
இருமகளிர் ஒருபுருடனென அவர்மூவர்

31 ஒப்பரிய இப்புருடர்க் கோர்புதல்வர் உதித்தார்.
ஒருத்தி மகள்பாவி. ஒருத்தி முழுமலடி.
செப்பரிய அம்மலடி செல்வமிக வுடையாள்.
செகமனைத்தும் அவள்படைத்த செல்வமென
மொழிவர்.

32 உடல்பிரியா நிழல்போல உதித்த அப்புதல்வர்
உடன்கூடி விளையாடி யொன்றாக வளர்ந்தேன்.
அடல்பெரியார் : அருள்உருவர் : அலகில் வடி
வுடையார்.
அவருடைய திருநாமம் அறைவேனோ
அடிகாள்!"

33 உரைத்தமொழி கேட்டிருடி யுடல்புளகம்முறு
ஊறிவிழிநீர் வதனம்ஒழுக அஃதொளிக்க
பரிக்கவிற கெடுப்பவன்போல் எழுந்து நடந்திருந்
தான்
இளம்பிடியுந் தன்கதையை யெடுத்தனள் முன்
தொடுத்தே.

34 "மலடி சிறுதாய் படைத்த மதிப்பரிய செல்வம்
மடமகளென் றெனக்களித்தாள் மயங்கிஅதில் மகிழ்ந்து
தலைதடுமாறச் சிறியதாயினது நிலையுந்
தலைவனையுந் தன்மையையுந் தகைமையையும் மறந்தேன்.

35 குறிப்பாயுள்ளுணர்த்தியும் யான்கொள்ளாது விடுத்தேன்.
குறும்புமதியால் மனந்துகுடி புகுந்தாய் நெகிழ்த்தேன்.
வெறுப்பாக நினைந்தென்மேல் வேதனைப்பட்டவரும்
வெறும்பாடு றென வுள்ளமென விட்டு விலகினரே.

36 பொருள்விரும்பிக் குலம்விரும்பிப் பொலிவை விரும்பி வந்தோர்
பொய்க்காதல் பேசினரோ பகலில் அளவில்லை.
அருள்அரும்பி யெனைவிரும்பி யாரும் வந்திலர்
அவரொழிய வேறிலை யொன்றறிந்தார் ஆயிருந்தேன்.

37 ஒருவாரம் ஒருமாதம் ஒருவருடகாலம்
ஓயாமல் உன்னியழிந்தேன். உருவங்காணேன்.
திருவாருஞ் சேடியர்க்குச் செப்ப அவர்சேருந்
திசைதேயம் எவர்அறிந்து தெரிப்பரெனச் சிரித்தார் :—

38 ஆயத்தார்கூடி யெனையாயவுந்தான் ஒட்டார்.
அகல்வேலையோ எறியும் அகோராத்திரங்
கெடுத்து.
தீமைத்தானே யுமிழுஞ்சிறந்த கலைமதியும்.
திரிந்துலையுங்காலும் உயிர்தின்னும் நமனென்ன.

39 கண்டவரைக் கேட்டவரைக் காசினியில்தேடிக்
கண்டிடச்சென்றே அலைந்தகட்டம் எனைத்
தென்க!
உண்டெனத்தம்பூக நெறியுரைப்பவரே யல்லால்
உள்ளபடி கண்டறிந்தோர் ஒருவரையுங்
காணேன்.

40 உண்டெனிலோ கண்டிடுவன்; இல்லை யெனில் ஒல்லை.
உயிர்விடுதலே நலம் என்றுன்னி யுளந்தேறி
கண்டுயிலும் இல்லிடந்தீகதுவ, வெளியோடிங்
கனைக்கா இவ்வேட மொடுகரந்து புறப்பட்டேன்.

41 தீர்த்த குலமூர்த்தி தலம்பார்த்துடலஞ் சலித்தேன்.
திருக்கறு பற்குருக்கள் மடந்திரிந்துமனம்
அலுத்தேன்.
வார்த்தைகத்தும் வாதியர்தம் மன்றனைத்தும் வறிய.
மறுத்துறங்கும் யோகியர் போட்வாழ் குகையும்
பாழே.

42 மான்மறவாக் கலையினமே! வாழ்பிடி விட்டகலா
மதம்பெருகு மாகுலமே! வன்பிகமே! சுகமே!
நான்மறவாநாதனை யெஞ்ஞான்றும் அறிவீரோ?
நவில்வீர் எனப்பின்தொடர்ந்து நாளனந்தங்
கழித்தேன்.

48 “சிவகாமி யான் உனது சிதம்பரனே” என்னச்
செப்பு முனம் இருவருமற்றோருருவம் ஆனார்!
எவர்தாமுன் அணைந்தனர் என்றிதுகாறும்
அறியோம்.
இருவரும் ஒன்றாயினர் என்றே அறையுஞ்சுருதி.

49 பரிந்துவந்து பார்வதியும் பாரதியுஞ் சஞ்சப்
பார்க்கவியும் யார்க்கிதுபோல் வாய்க்குமென
வாழ்த்த,
அருந்ததியும் அம்ம! இஃதருங்சதி யென்றுஞ்ச
ஆர்வம் உலகார்கவென ஆரணங்கள் ஆர்க்க.

50 ஆழிபுடை சூழுலகம் யாவும் நலம்மேவ!
அறத்துறை புகுந்துயிர்கள் அன்புவெள்ளம்
மூழ்க!
பாழில் அலைவேனுடைய பந்தனைகள் சிந்த
பரிந்தருள் சுரந்தமை நிரந்தரமும் வாழ்க!

---

# ಪೆರುಂಕತ್ತೈ

ಕೊಂಗುನಾಡಿನ ಕಿರಿಯರಸುಗಳಲ್ಲಿ ಒಬ್ಬನಾದ ವಿಜಯಮಂಗಲದ ಕೊಂಗುವೇಳಿರ್ ಎಂಬಾತನು ಇದನ್ನು ರಚಿಸಿದನು. ಇದು ಶಬ್ದ ಸ್ವಾರಸ್ಯ ಅರ್ಥಸ್ವಾರಸ್ಯಗಳಿಗೆ ಪ್ರಖ್ಯಾತವಾಗಿದೆ. ಪೈಶಾಚೀಭಾಷೆ ಯಲ್ಲಿರುವ ಗುಣಾಢ್ಯನ ಬೃಹತ್ಕಥೆಯೂ ಸಂಸ್ಕೃತದಲ್ಲಿರುವ ದುರ್ವಿನೀತನ ಗ್ರಂಥವೂ ಇದಕ್ಕೆ ಮೂಲ. ಪೆರುಂಕತ್ತೈಯಲ್ಲಿ ಈಗ ನಮಗೆ ಉಳಿದು ಬಂದಿರುವುದು ಐದು ಕಾಂಡಗಳು ಮಾತ್ರ. ಕುರುಕುಲದಲ್ಲಿ ಹುಟ್ಟಿ ಕೌಶಾಂಬಿಯ ದೊರೆಯಾದ ಸದಾನಿಕನ ಮಗನಾದ ಉದಯನನ ಚರಿತ್ರೆಯೇ ಈ ಗ್ರಂಥದವಸ್ತು.

ಈ ಕವಿ ಒಳ್ಳೆಯ ಕಲೋಪಾಸಕ. ಇವನಿಗೆ 'ಅರುಂಕಲೈ ವಿನೋದನ್' ಎಂಬ ಹೆಸರಿತ್ತು. ಇವನು ಹಲವು ವಿದ್ವಾಂಸರಿಗೆ ಆಶ್ರಯ ಕೊಟ್ಟು, ಅವರಿಗೆ ಯಾವ ಕೊರತೆಯೂ ಇಲ್ಲದಂತೆ ನೋಡಿಕೊಂಡು, ಗ್ರಂಥಕಾಲಕ್ಷೇಪ ಮಾಡುತ್ತಿದ್ದನು. ಅವರ ನೆರವಿಯಲ್ಲಿಯೇ ಯಾವಾಗಲೂ ಕಾಲ ಕಳೆಯುತ್ತಿದ್ದುದರಿಂದ ಇವನಿಗೆ ಕವಿತಾಶಕ್ತಿ ಮೊಳೆಯಿತು.

# பெருங்கதை

## வத்தவ காண்டம்

## 13. முகவெழுத்துக்காதை

(உதயணன் செயல்)

விரைந்தனர் பெயர வேந்தன் காம
சரம்பட நொந்து தளர்வுட னவனோர்
பள்ளியம்பலத் துள்ளினி திருந்து
மேவத் தகுமுறைத் தேவியர் வருகென
ஏவற் சிலதியர் தாமவர்க் குரைப்பக்

(தேவியர் இருவரும் உதயணனைபால வருதல்)

காவல் வேந்தன் கரைந்ததற் கயிர்த்து
மேவுகந் துகத்தியைக் கோயிலுண் மறைத்து
மறவி றேவிய ரிருவரும் வந்து
திருவமர் மார்பனைத் திறத்துளி வணங்கலிற்

(தோழியரை உதயணன் வருவித்து வினவுதல்)

பெருகிய வனப்பிற் பேணுந் தோழியர்
புகுதுக வென்றலும் புக்கவ ரடிதொழச்
சுற்றமும் பெயருஞ் சொல்லுமி னீரென
முற்றிழை மாதரை முறைமுறை வினவலின்
மற்றவ ரெல்லா மறுமொழி கொடுப்பக்

(உதயணன் வாசவதத்தையை வினவுதல்)

கொற்ற வனுரைக்கும் பொற்றொடித் திரளினைப்
பாரான் பார்த்தொரு பைந்தொடி நின்னொடு
வாரா தொழிதல் கூறெனக் கூறலும்

(வாசவதத்தை சினந்துரைத்தல்)

ஒழிந்த மாதர்க் குரைப்பதை யுண்டெனிற்
றனித்து நீகண் டருள வைக்கு வென்னெனப்

(உதயணன் கூறுதல்)

படைமலி நயனங் கடைசிவப் பூரும்
திறனவண் மொழியொடு தெளிந்தன னாகிப்
பற்று மன்னன் படைத்தவும் வைத்தவும்
உற்றவ ளறியு முறைமையிற் றெளிந்தேன்
மதிவே றில்லென வாசவதத்தையும்
கருமமுன் னிக் குருசில்..........................................
..............................................................................

(உதயணன மானனீகையை வினாதல்)

பூக்கமழ் குழலி புகுந்தடி வணங்கலின்
நோக்கின னாகி வேற்படை வேந்தன்
பைந்துணர்த் தொடையற் பாஞ்சாலராசற்கு
மந்திர வோலையும் வழக்கறை காவலும்
தந்திர நடாத்தலுந் தகையுடைக் கோலம்
அந்தப் புரத்திற் கணிதனு மெல்லாம்
நின்னைச் சொல்லுவர் நன்னுதல் பெயரும்
துன்னருஞ் சுற்றமு முன்னுரை யென்றலும்

(மானனீகை கூறல்)

வாட்டிறல் வேந்தனை வணங்கித் தன்னை
கூட்டின ளாகி மீட்டவண் மொழிவோள்
கோசலத் தரசன் மாபெருந் தேவி
மாசில் கற்பின் வசுந்தரி யென்னும்
தேனிமிர் கோதை சேடியேன் யான்

மானனீகை யென்பதென் னாமம்.
எம்மிறை படையை யெறிந்தன னோட்டிச்
செம்மையிற் சிலதியர் தம்மொடுஞ் சேரப்
பாஞ்சாலராசன் பற்றிக் கொண்டு
தேன்றோர் கூந்தற்றேவியர் பலருளும்
தன்னமர் தேவிக்கீத்த பின்றை
வண்ணமகளா யிருந்தனெ னன்றி
அருளிய தியாது மறியே னியானெனக்
கடல்புரண் டெனப்பயங் கழூதன ணிற்ப

( உதயணன் செயல் )

வாகைவேந்தன் மதித்தன னாகிக்
கேளுடை முறையாற்கிள ரொளிவனப்பின்
வாசவதத்தைக்கும் வண்ணமகளாய்
நாளும் புனைகென நன்னுதல் பெயர்ந்தவள்

( மானனீகை செயல் )

அடிமுதற் றொட்டு முடியள வாகப்
புடவியின றியாப் புணர்ப்பொடு பொருந்தி
ஓவிய ருட்கு முருவக் கோலம்
தேவியைப் புனைந்தபின் மேவிய வனப்பொடு

( உதயணன் செயல் )

காவலற் காட்டக் கண்ட னாகி
அழித்தலங் கார மறியா ளிவளெனப்
பழித்தியான் புனைநெறி பாரெனப் புனைவோன்
பற்றிய யவன பாடையி லெழுத்தவள்
கற்றன ளென்றெடுத் துற்றவ ருரைப்பக்
கேட்டன னாதலிற் கோற்றொடி நுதன்மிசைப்
பூந்தாதோடு சாந்துறக் கூட்டி

ஓடியா விழுச் சீருதயண னோலை
கொடியோர் மருங்குற் குயின்மொழிச் செவ்வாய்
மானனீகை காண்க சேணுயர்
மாடமீமிசை மயிலிறை கொண்டென
ஆடன் மகளிரொ டமர்ந்தொருங் கிண்டி
முந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்
பந்துவிளை யாட்டினுட் பாவைதன் முகத்துச்
சிந்தரி நெடுங்கணொன் னெஞ்சகங் கிழிப்பக்
கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றே னவ்வழ லவிக்குமா மருந்து
கோற்றேன் கிளவிதன் குவிமுலை யாகுர்
பந்தடி தானுறப் பறையடி யுற்றவென்
சிந்தைபு நிலையுஞ் செப்புதற் கரிதெனச்
சேம மில்லாச் சிறுநுண் மருங்குற்
காதார மாகி யதனொடு தளரா
அருந்தனந் தாங்கி யழியுமென் னெஞ்சிற்
பெருந்துயர் தீர்க்கு மருந்து தானே
துன்றிய வேற்கட் டொழிலு மெய்யுழுதும்
பைங்கொள் கொம்பாய்ப் படர்தரு மிந்நோய்
ஆழ்புனற் பட்டோர்க் கரும்புணை போலச்
சூழ்வளைத் தோளி காமநற் கடலிற்
றாழ்வுறுமற் கொள்க தளர்ந்துயிர்
சென்றாற் செயன்முறை யொன்றுமி லென்றியும்
அடுக்கிய விளமை தலைச் செவிஞந்தரக்
கிடைப்பதி லிரப்போர்க் களிப்பது நன்றெனை
நினைத்த வாசக நிரப்பின் றெழுத
இடத்தள வின்மையிற் கருத்தறி வோர்க்குப்

பரந்துரைத் தென்னை பாவையிக் குறை
இரந்தனெ னருளென விறைமக னெழுதி
மெல்லியற் கொத்த விவையெனப் புகழ்ந்து
புல்லினன் றேவியைச் செல்கென விடலும்

(வாசவதத்தையின் முகவெழுத்தை மானனீகை காணல்)

கோயில் குறுக வாய்வளை யணுகலும்
காவலன் புனைந்தது காளெனக் கண்ட
காசறு சிறப்பிற் கோசலன் மடமகள்
வாசக முணராக் கூசின ளாகிப்
பெருமக னெழுதிய பேரலங் காரத்
திருமுக மழகுடைத் தெனமருட் டினளாய்
உட்கு நாணு மொருங்குவந் தடைய
நற் பலகூறி யப்பகல் கழிந்தபின்

(மானனீகை எழுதி விடுத்தல்)

வழிநாட் காலைக் கழிபெருந் தேவியைப்
பழுதற வழகொடு புனைநலம் புனையாக்
குங்கும மெழுதிக் கோலம் புனைஇ
அங்குவ ணுதன்மிசை முன்பவ னெழுதிய
பாடை கொண்டுதன் பெயர்நிலைக் கீடா
நீல நெடுங்க ணிரை வளைத்தோளி
மறுமொழி கொடுக்கு நினைவினளாகி
நெறிமயிர்க் கருகே யறிவரி தாக
முழுதிய லருள்கொண் டடியனேன் பொருளா
எழுதிய திருமுகம் பழுதுபட லின்றிக்
கண்டேன் காவல னருள்வகை யென்மாட்
டுண்டே யாயினு மொழிக வெம்பெருமகன்

டடந்தை யர்க்கெவ்வாறி யைந்ததை யியையும்.
பொருந்திய பல்லுரை யுயர்ந்தோர்க் காகும்
சிறியோர்க் கருளிய வுயர்மொழி வாசகம்
இவைய தன்று மிவ்வயி னொருவரும்
காணா ரென்று காவலு ளிருந்து
பேணா செய்தல் பெண் பிறந்தோருக்
கியல்பு மன்றே யயலோ ருரைக்கும்
புறஞ் சொலுமன்றி யறந்தலை நீக்கும்
திறம் பலவாயினுங் குறைந்த வென்றிறந்து
வைத்ததை யிகழ்ந்து மறப்பது பொருளென
உற்றவண் மறுமொழி மற்றெழு தினளால்
அடியேற் கிவைய திதுவென விடலும்

(மானனீகை எழுதியதைக் கண்டு உதயணன் மீட்டும் எழுதிவிடல்)

வடிவே லுண்கண் வாசவதத்தை
திண்டிற லரசனைச் சென்றனள் வணங்கலும்
கண்டன னாகிக் கனங்குழை யெழுதிய
இயனோக் கினனா யியையா வாசகம்
தழலுறு புண்மேற் சருவி பாய்ந்தெனக்
கலங்கின னாகி யிலங்கிழைக் கேதோர்
நலங்கவின் காட்ட னணுகென வணுகிக்
கண்ட முறைமையிற் பண்டிய லாக்கவல்
கொண்டன னாகி யொண்டொடி யாகம்
இன்றை யெல்லையு ளியையா தாயிற்
சென்ற தென்னுயிரெனத் தேவிமுகத் தெழுதி
வாட்டிறல் வேந்தன் நீட்டினன் விடுத்தலிற்

(உதயணன் எழுதியதை மானனீகை உணர்தல)

பெருமகள் செல்லத் திருமகள் வாசகக்
கருமமெல்லா மொருமையி னுணர்ந்து
வயாத் தீர்வதற் கொரு யாத்துணை யின்றி
மறு சுழிப்பட்ட நறுமலர் போலக்
கொட் புறுநெஞ் சினைத்திட்பங்கொளீஇ
விளைக பொலிக வேந்தனுறு குறை
களைகுவ லின்றெனுங் கருத்தொடு புலம்பு

(மானனீகை மறுமொழி யெழுதி விடுதல)

அற்றை வைகல் கழிந்தபி னவளை
மற்றுய ரணிநலம் வழிநாட் புனைஇக
கூத்தப் பள்ளிக் குச்சரக் குடிகையுட்
பாற்படு வேதிகை சேர்ந் தனளாகி
அரவுக் குறியி னயலவை ரறியா
இரவுக் குறியினி யல்பட வெழுதி
மாபெருந் தேவியை விடுத்தபின் மற்றவள்

(மானனீகை யெழுதியதைக்கண்டு உதயணன உவத்தல்)

தீவிய மொழியொடு சேதிபற் குறுகி
நோன்றாள் வணங்கித் தோன்ற நிற்றலும்
திருநுதன் மீமிசைத் திறத்துளிக் கிடந்த
அருளோர் வாசகந் தெருளுற வறிந்து
மற்றவள் பயந்தனள் பொற்புற வெழுதிய
இற்றைப் புதுநல மினிதென வியம்பி
மாதர் நோக்கின் மான னீகைகட்
காமம் பெருகிக் காதல் கடிகொள
மாமனத் தடக்கித் தேவியோ டினியன
கூறியப் பகல்போ யேறிய பின்றை

(மானனீகை மறைந்திருத்தல்)

மானனீகை வாசவதத்தையைக்
தான்மறைந் தறைகுறி மேவின ளிருப்ப

(உதயணன் செயல்)

வென்வேற் றலைவனும் வேட்கை யின்றிக்
தேவிய ரிருவர்க்கு மாறுதாயில் கூறக்

(வாசவதத்தை உதயணன் செயலை அறியும்படி காஞ்சனமாலையை விடுத்தல்)

கயிற்பூண் கோதை யயிர்த்தன ளிருப்பப்
பெயர்த்தன ளொதுங்கிப் பெயர்தரக் கண்டே
காஞ்சன மாலையைக் கையெயிற் பயிர்ந்து
பூந்தார் மார்பன் புகுமிட னறிகென
ஆய்ந்த வேந்த னுடற் பேரறை
சார்ந்தயி னொருசிறை சேர்ந்தன ளிருப்பத்

(உதயணன் மானனீகையுடன் அளவளாவல்)

திருத்தகு மார்பன் கருத்தொடு புகுந்து
விருப்பொடு தழுவி நடுக்கந் தீரக்
கூடிய வேட்கையி னொருவர்க் கொருவர்
ஊடியுங் கூடியு நீடுவிளை யாடியும்
இருந்த பின்றை யிருவரு முறைமுறை
திருந்திய முகத்துப் பொருந்திய காதலொ
டெழுதிய வாசக மெல்லா முரைத்து
வழுவு தலின்றி வைகலு மீங்கே
குறியெனக் கூறிச் சிறுவிரன் மோதிரம்
கொடுத்தன னருளிக் கோயிலு ணீங்க

(காஞ்சனமாலை தான் அறிந்ததை வாசவதத்தைக்கு உணர்த்தல்)

விடுத்தவ ளேகி யடுத்தது முரைத்துத்
தன்னுட் பொருமலொடு தனித்தனி தெரிய
இன்னதென் றெடுத்து நன்னுதற் குரைப்ப

(வாசவதத்தை உதயணனைக்கண்டு கூறல்)

முறுவல் கொண்டு செறுவகத் தடக்கிப்
பொறையாற் றவளா யிறையுயிர்த் தாற்றி
புணர்ந்த காலை புரவலற் குறுகி
நலங்கிளர் மலர்கொண் டிறைஞ்சின ளிருந்தியான்
இரவு கண்டதோ ரொருகன வதனின்
புதுமை கேட்கிற் புரைதீர்ந் ததுவெனச்

(உதயணன் வினவுதல்)

செவ்வாய் வெண்ணகைத் திருந்திழை கண்ட
தெவ்வா றோவென வியம்பினன் கேட்பநின்

(வாசவதத்தை கூறல்)

மனத்துழைப் பெயரா வெனைக்கரந் தெழுந்தனை
தனித்துப் போயோர் தடந்தோண் மடந்தையொ
டாட ரங்கேறி யணைந்திருந் தவளோ
டூடியு முணர்ந்துங் கூடி விளையாடியும்
தேறினி ராகித் தெளிவுட னிருவிருப்
மாறுமா றெழுதிய வாசகங் கூறி
மாதரு நீயு மயலுரைத் தெழுந்து
போதரும் போதையின் மோதிர மருளிப்
பெயர்ந்தனை நயனமு மலர்ந்தன வாங்கே
புலர்ந்தது கங்குலும் புரவல வாழ்கென

(உதயணன கூற்று)

வண்டலர் கோதாய் மனத்தினு மில்லது
கண்டனை யாகலிற் கலங்கினை மற்றுநின்
உள்ளத் துள்ளே யுறைகுவே னாகவும்
கள்வ னென்று கருதினை யன்றியும்
நெறியுடை மகளிர் நினைப்பவுங் காண்டலும்
இவையிவை போலுங் கணவர்கந் திறத்தெனக்

(வாசவதத்தை கூற்று)

கனவிற் கண்டது பிறரொடு பேசக்
குறைபோ மென்றலிற் கூறினே னன்றியும்
யானவை காணினுங் காவலற் கன்றிப்
பேசுவ தெவரொடு பெரியோ யென்று

(வாசவதத்தை உதயணனை நீங்கல்)

மானார் நோக்கி மனத்தொடு நகையா
ஆனா நினைவுடை னகற வேந்தன்

(உதயணன் செயல்)

தேவியை யையந் தெளித்தன மொருவகை
யாரு மில்லென வினிதிருந் துவப்பப்
பானுவுந் தேரொடு படுவரை யிடைபுக

(வாசவதத்தையின செயல்)

மானனீகையைக் காவல் வைத்தனளாய்
மாந்தளிர் மேனியுங் காஞ்சன மாலையொடு
நேர்ந்தவர்க் குறியிற்றான் சென்றிருப்ப

(உதயணன் செயல்)

நிகழ்ந் ததையறியா னெழுந்து மெல்லென
நடந்தவன் சென்றவளிடந் தலைப்படலும்

வேந்தன் செய்வது காண்குவ மென்று
காம்பேர் தோளிகையி னீக்கலும்
மானனீகை தானூடின ளாகி
மேவல ளாயினள் போலுமென் றெண்ணி
முரசு முழங்கு தானையரசொடு வேண்டினும்
தருகுவ லின்னே பருவர லொழியினி
மானே தேனே மானனீகா யெனக்
கானேர் பற்றத்தானது கொடாஅ
துரைப்பது கேட்ப மறுத்தவ ளொதுங்கி
நிலைப்படு காமந் தலைப்படத் தரியான்
புதுமை கூறியிவண் முகம் பெறுகேனென
மதித்தன னாகி யொருமொழி கேளினி
முகைக்கொடி முல்லை நகைத்திரு முகத்துத்
தகைக்கொடி யனையோள் வாசவதத்தை
இயைந்த நெஞ்சுடை யாமிரு வர்க்கும்
கழிந்த கங்குலி னிகழ்ந்ததை யெல்லாம்
கனவது முந்திய வினைய தாதலின்
அதனிற கண்டெனக் கொளியா துரைப்ப
அதற்கொரு வழியான் மனத்தினு மில்லெனத்
தெளித்த நிலைமையுந் தெளிந்திலையே யெனப்
பெயரப் பெயர முறைமுறை வணங்கி
இயனிலை மானனீகா யருளென்
றடுத்தடுத் துரைப்பவு மாற்றா ளாகவும்
இதச்சொற் சொல்லவும் வணக்கஞ் செய்யவும்

( வாசவதத்தையின் செயல் )

பெட்ப வருதலிற் பிடித்தல் செல்லாள்
நக்கன ளாகி மிக்கோய் கூறிய

மானுந் தேனுமான னீகையும்
யானன் றென்பெயர் வாசவதத்தை

(உதயணன் செயல்)

காணைக் கைவிட் டோடின னோடி
அடுத்த காட்சியிற் றனித்தொரு மண்டபத்
தொளித்தன னாகித் திகைத்தன னிருப்பச்

(வாசவதத்தையின் செயல்)

சினங்கொ ணெஞ்சொடு பெயர்ந்தவள் வதியப்
புலர்ந்தது கங்குலும் பொருக்கெனப் பொலிந்தென.

# ಮಣಿಮೇಗಲೈ

ಪಂಚಮಹಾಕಾವ್ಯಗಳೆಂದು ಪ್ರಸಿದ್ಧವಾಗಿರುವ ಐದು ತಮಿಳು ಗ್ರಂಥಗಳಲ್ಲಿ ಮಣಿಮೇಗಲೈ ಒಂದು. ಮಿಕ್ಕ ನಾಲ್ಕು: ಶಿಲಪ್ಪದಿಗಾರಮ್, ಜೀವಕ ಚಿಂತಾಮಣಿ, ವಳೈಯಾಪತಿ, ಕುಂಡಲಕೇಶಿ. ಚೇರನ್ ಚೆಂಗುಟ್ಟವನಲ್ಲಿ ಆಸ್ಥಾನ ಕವಿಯಾಗಿದ್ದ ಶಾತ್ತನಾರ್ ಇದರ ಕರ್ತೃ. ಮಣಿಮೇಗಲೈ ಇಳಂಗೋವಡಿಗಳ ಶಿಲಪ್ಪದಿಗಾರದ ಉತ್ತರಾರ್ಧ ದಂತಿದೆ. ಶಾತ್ತನಾರ್ ಬೌದ್ಧರು. ಬೌದ್ಧಧರ್ಮದ ಸಾರವನ್ನು ಇವ ರಷ್ಟು ತಿಳಿಯಾಗಿ ತಮಿಳಿನಲ್ಲಿ ಹೇಳಿರುವವರು ಬೇರೊಬ್ಬರಿಲ್ಲ.

# மணிமேகலை

## ஊரலருரைத்தகாதை

நாவ லோங்கிய மாபெருந் தீவினுட்
காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த
தீவகச் சாந்தி செய்தரு நன்னாண்
மணிமே கலையொடு மாதவி வாராத்
தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செல்லலுற் றிரங்கித்
தத்தரி நெடுங்கட் கட்டன் மகடோழி
வயந்த மாலையை வருகெனக் கூஉய்ப்
பயங்கெழு மாநக ரலரெடுத் துரையென
வயந்த மாலையு மாதவி துறவிக்
கயர்ந்து மெய்வாடிய வழிவின ளாதலின்
மணிமே கலையொடு மாதவி யிருந்த
வணிமலர் மண்டபத் தகவயிற் செலீஇ
யாடிய சாய லாயிழை மடந்தை
வாடிய மேனி கண்டுளம் வருந்திப்
பொன்னே ரனையாய் புகுந்தது கேளா
யுன்னோ டிவ்வூ ருற்ற தொன்றுண்டு கொல்
வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலுந்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்

பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமுங்
காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங்
கோலங் கோடலுங் கோவையின் கோப்புங்
காலக் கணிதமுங் கலைகளின் றுணிவு
நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
வோவியச் செந்நூ லுரை நூற் கிடக்கையுங்
கற்றுத்துறை போகிய பொற்றொடி நங்கை
நற்றவம் புரிந்தது நாணுடைத் தென்றே
யலகின் மூதா ரான்றவ ரல்லது
பலர்தொகு புரைக்கும் பண்பில் வாய்மொழி
நயம் பாடில்லை நாணுடைத் தென்ற
வயந்த மாலைக்கு மாதவி யுரைக்குங்
காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா வுயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து
நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்
காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரீயா ராயி
னன்னீர்ப் பொய்கை யினளியெரி புகுவர்
நளியெரி புகாஅராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்
தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்

